உ

சிவமயம்

# மதுரைச் சொக்கலிங்கமூர்த்தி தோத்திரப்பாக்கள்.

## சென்னப்பநாயகன்பாளயம் சொக்கலிங்கசுவாமி தோத்திரப்பாக்கள்.

அண்ணாமலைநாதர் தோத்திரப்பாக்கள்,

இவை

ஷை சென்னப்பநாயகன்பாளயம் மஹாராஜஸ்ரீ காவடி
சிதம்பரமுதலியாரவர்கள் குமாரர்
குமரசாமிமுதலியாரவர்களியற்றி

கும்பகோணம் - ஸ்ரீ - ல - ஸ்ரீ
பழனிமுத்தையரவர்கள் குமாரர்
சிவகுருநாதஐயரவர்களாற் பரிசோதித்து

புதுவையில் ஆன்றோர் அனுமதிபெற்று
ஸ்தாபித்திருக்கின்ற
ஸ்ரீ சுவேதபத்மாசனி அக்ஷரசாலையில்
பதிப்பிக்கப்பெற்றன.

1889





உ

கடவுள் துணை.

# சிறப்புப்பாயிரம்.

இஃது

கும்பகோணம் பழனிமுத்தையரவர்கள் குமாரர்

## சிவகுருநாதையரவர்கள்

இயற்றிய

நிலமண்டிலவாசிரியப்பா.

பொன்னமர்ந் துறையும் புண்ணிய மதுரை
தன்னையாண் டளிக்குஞ் சற்குண மலயத்
துவசன் மகத்திற் சுரரயன் மான்முதல்
எவரும் பரவு மிறைவிமும் முலையுடன்
தடாதகைப் பிராட்டியாந் தனிப்பெயர் பெற்றெழீஇத்
தடாப்புகழ்ச் செழியன் றன்குறை தவிர்த்து
மணிமுடி புனைந்து வையகம் புரந்து

விணிலர சன்முதல் வேந்தரை வென்று
திறைகொடு கயிலை சென்றுபல் கணத்தவர்
நிறைவலி கெடப்போர் நிகழ்த்திய காலையிற்
செம்மான் கரத்தம ரெம்மான் மும்மதக்
கைம்மா வுரித்த கண்ணுத லொற்றைச்
சரண்முதற் றன்னுருத் தனியே வபங்க
விரைவுடன் றோன்ற விழைவொடு கண்ட
மெல்லிய றனக்கோர் வியன்முலை மறைந்த
வெல்லையி லுணு மேந்திழை தன்னைத்
தொல்லையின் மணந்தநாள் சோதிப் பொன்முடி
புனைந்தர சாண்ட புரவலன் மனத்து
நினைந்தவை யருளு நெடுந்தலை சோம
சுந்தர பாண்டியன் றோண்மீ தணிதரச்
செந்தமிழ் மாலை திகழ்தரச் சாத்தி
இம்மையோ டம்மை முத்தியென் றியம்பு
மும்மைப் பயனு முற்றுறப் பெற்ற
சேனூர்த் திருபொழிற் சென்னப் பன்பதிக்
கேனு வசிக்கு மிரும்புகழ்க் காவடிச்
சிதம்பர மான்முனஞ் செய்தவப் பேற்றால்
இதம்பெற வுதித்தக விளையடிக் கன்புசெய்

குமரசா மிக்கோன் குதுகலங் கண்டு
பமரமார் தொடையணி பார்த்திப ரிடத்துப்
பலவளம் பெற்ற பாவல ரெல்லாம்
நிலமிசை யிவன்போ லித்தியப் பொருளைப்
பெற்றில மென்னப் பெரிது மழுக்கா
றுற்றன ரிவற்கிணை யுரைப்பதிங் கெவனே.

---

இஃது

பு - அ - பெரியசாமிப்பிள்ளையவர்கள்

இயற்றிய

நேரிசை வெண்பா.

பொன்னப்பன் கஞ்சன் புலோமசைய னாதியர்தாம்
என்னப்பன் சோமசுந்த ரேசன்மேல் - சென்னப்பன்
தன்னகர்வா ழுங்குமர சாமியன்பன் சாற்றியபா
மன்னவர்செவிக் கேற்ற மருந்து.

இஃது

லா - சு-வேலாயுதப்பிள்ளையவர்கள்மாணாக்கர்

புதுப்பாளையம்

அ - பொன்னுசாமிப்பிள்ளை

இயற்றிய

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

சீர்மேவு மரம்பையினற் கனித்தேன் சிந்தித் தி
சம்வயல்க ளிற்பாய்ந்து செங்கெ லோங்கி, கார்மே
வெண் ணூன்கறங்க ளார்சென் னப்ப நாயகன்பா லை
யமதிலென் ஞான்றும் வாழ்வோன், ஏர்மேவுஞ் சிதம்
பரமால் குமரற் போற்றி யின்குமர சாமியன்பா மி
லங்கு கொன்றைத், தார்மேவுஞ் சொக்கலிங்கப் பெ
ருமான் ஞானிற் சாத்தினன் பாமாலை சதுராத் தானே.

உ
ஸ்ரீ சுவேதபத்மாசலை அக்ஷரசாலைக்கதிபர்
ஸ்ரீ ஸ்ரீநிவாச - ஆறுமுகம்பிள்ளையவர்கள்
இயற்றிய
அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

பொன்னருளடைந்த மிக்கோர் போற்றிய புலவர் சங்கம்
மன்னிய மதுரைச் சொக்கர் மலரடிக் கின்சொன் மாலை
நன்னல முறவே சாத்தி நனிமகிழ் குமர சாமி
யின்னிலப் பேறீ ரெட்டு மெய்தியே வாழ்வன் மாதோ.

சிறப்புப்பாயிரம்
முற்றிற்று.





உ

கணபதிதுணை.

# மதுரைச்சொக்கலிங்கசுவாமி

# தோத்திரப்பாக்கள்.

## காப்பு.

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

அன்பர்க ளுள்ளந் தோறு மானந்த வடிவாய் நின்றே
யின்பமாந் துதியேற் றன்னோர்க்கியம்பரு முத்தி யீவோர்
யென்பெரு விருப்பாற் சொக்கர்க் கினியபாமாலைசொல்வார்
ருன்பத கமலந் தாழ்ந்தே னொருத்தன்மாமுகவாள் வாயே

## குருஸ்தோத்திரம்.

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

அருணையம் பதியி லிலகிடும் பெம்மா னருட்பிர காச
தே சிகப்பேர், பரிவுடன் பூண்டெ-ன் சிறுகுடில் வந்
து பாவியேன் பணிவிடை யேற்றுக், கருவொழித்
திடுவான் முத்திமந் திரத்தைக் கழறுதற் கெத்தவஞ்
செய்தேன், இருவரு ளடைந்தே னன்னவன் பாதஞ்
சிரமிசைக் கொண்டனன் யானே.

வெண்பா

மாலபற்கு மெட்டாத வள்ள லிணையடிபைச்
சாலப் புகழ்ந்தேத்துஞ் சற்குணனுஞ் - சீலச்
சிவகுருநா தப்பெயர்கொ டேசிகன்றாள் போற்றிப்
டவவினையை நெஞ்சேநீ பாற்று.

## அவையடக்கம்.

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

திருத்தமிலாப் பசுங்குழவி சொல்லுந் தீச்சொல்
செவிக்குணவாக் கொள்வரல்லாற் செல்வம் மிகு, ல

ருத்தியுள தாயகற்றி யடியார் போல வடித்தனிசீ ரிலக்
கணத்தோ டிலக்கி யங்கள், பொருத்தமிலா வித்துதி
யை யேழை யேனும் புகன்றதனு ளிக்குவரோ புரை
தீர் வேதக், கருத்துணர்ந்து தமையறிந்து பேத
மென்னுங் கட்டறுத்துப் பரநிலையிற் கலந்துளோரே.



## நூல்.

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

வலக்காலை வழுதியர்கோன் றனக்காத் தூக்கி மா
றியா டியமதுரை மணியே நாயேன், கொலைக்கால ன
னையவிழி மடவா ராசைக் கொடுவலைப்பட் டழிவதுனை
க் கழலோ முன்னுங், குலக்காமர் மறையுணர்ந்த மிரு
கண் டீன்ற குமரனுக்காச் சமனையுதைத் தருளுங் கோவே
இலைக்கால லுனக்கெனவென் னெதிர்வந் தோர்சொ
ல் லியம்புவதெந் நாளிந்நா ளினிமேலாய் வாதோ. (௧)

ஒவ்வாதோ வென்னையுனக் கடியா னென்ன வு லகிலுளோ ரதனிற் பழிப்ப துண்டோ, இவ்வாறிவ் வுலகினிலெவ் வளவு கால மெங்ஙெந்தப் பிறப்பிலு மூன் றழிகு வேனோ, செவ்வாத வூரர்பவக் கடலைத் தா ண்டித் திருவருளான் முத்திபெறுங் கரையைச் சே ர்ந்திட், டுய்வான்முன் னருள்சுரக்குந் துவாத சாந்தத் தெரண்டபொருளே கண்ணுதலே பொளிர்பொற் குன்றே

குன்றாத வருட்கடலே கயற்க ணாளைக் குலவவொ ரு பாகம்வைத்த கோவே நால்வர்க், கன்றாலி னிழலி லிருந் தருமோ னத்தை யங்கையினாற் காட்டியரு ளமல மூர்த்தி, இன்றாலிங் குனையலதோர் துணைபொ ற் குண்டோ பெனக்கையிடே லுனைத்திட்டே னெந் தா யெந்தாய், பொன்றாதார் கற்பகமே கூடன் மேவும் புனிதவெழிற் சுந்தரனே புகலி யாமே. (ந)

புகலுங்கா ளினையலதோர் கதிவே றுண்டோ பொய்யருளம் பொருந்தாத புனித வாழ்வே, இகபரத்தி லாசையற்றே யுன்றாள் போற்று மெழிலடியா ருளக்

கோயி லிலகுஞ் சோதி, சகலகலை தேர்சனகா தியர்கள் போற்றுந் தயாநிதியே யிறையேயெனக் கடைக்க ணித்தாள் அலகிலாத வருட்கயற்க ணம்மை வாமத் தமர்மதுரைச் சுந்தரனே யடர் வாழ்வே. (௪)

அமரரெலா முணக்கப்ப மெய் யென்றே யலறுங்காற் கடலெழுந்த வாலா லத்தைச், சமமனைதோ டுட்கொண்டு சான்றாங் கண்டந் தனிற்பதித்தும் பரைப்புரந்த தயா ருவேயான், தமபிகர்ந்த கருங்கூந்தற் பேதை மார்கள் சலசமலர்க் கண்வலையாற் சால நொந்து, சுமதி கெட்டு வாடாமற் றடுத்தாட் கொள்வாய் தூய்க்கூடற் சுந்தரனே சோதி மூன்றே, (௫)

மூன்றுரு மலமகற்றி நிராசை வாய்ந்து முதலை பஞ்சாக்கரத்தை யொழியா தோதித், தோன்றுநின்ன டியிணைக்கே வழிபட் டோரைத் துணையென்றெண்ண டருங்கதிக்கே தோயா மூடன், யான்றுனைப் படியுப் வதையா நீயே யாட்கொள்ளா விடிலண்ட மனைத் து மீனு, தின்றருளர் முங்கயற்க ணம்மை வாமத் தெழின்மதுரைச் சுந்தரனென் றியம்புந் தேவே. (௬)

தேவரெலாம் வந்தனஞ்செய் முரன்மைத் தேவே சிறந்தநின தருளின்றிச் சிறியே னின்னைப், பாவனை செய தருச்சித்துத் துதிக்கு மாறெப் பரிசுகிடைத் திடுமாத லாலே யெந்தாய், மூவுருவா யையுருவா யி ருபத் தைந்து மூர்த்தமா யெல்லாமாய் முளைத்த வொன்றுஞ், சேவகனே மதுரைநகர்ச் சுந்த ரேசச் செம்மலே யெனைக்கைவிடேல் சொலுமிந் நாளே. (எ

நாளெல்லாம் வீணாளாக் கழித்தி யானும் நாரியர்பா சத்தழித லழகோ சொல்லாய், வேளானேன் றன்னைசெற்றி விழித்தீக் கன்று விருந்தாக்கி விண்ணவரைப் புரந்த தேவே, மாளாத பிறவிநோய் தவிர்க்கு நின்னை மறந்துமற்றோர் தெய்வமுநான் கருது வேனோ ஆளாது விடிலழகோ கதிவே றுண்டோ வருண்மதுரைச் சுந்தரனே யமர ரேறே. (அ)

ஏறூர்ந்த தனிமுதலே பவத்தாழ்ந் தியானு மெக்கா லு நினைநினைப்போ ரிதயக் கோயின் மாறாத நின்னடியைத் துதித்துத் தாழும் வகையறியா துழலுகின்றேன் வலித்தாட் கொள்வாய், ஆறாறு தத்துவத்துக் கப்

## அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

திருமகள் விலாச வேதச் சிறப்பொரு ளாறு பெற்
றுப்,பெருகிரு வினையால் வந்த பிறவிக ளனந்த மின்னுங்,
கருவிடைப் புகாம லியே கடைக்கணித் தாள வே
ண்டுந், செருவிடை யூருந் தேவே சென்னப்ப னகரு
ளானே. (க)

அன்றுநின் னன்ப ராகு மப்பருக் காகக் கல்லை,
நன்றொரு தெப்ப மாக நயந்தருள் செய்த கோவே, குன்
றவில் லேந்தி பொன்னார் கொடும்புர நகைத்தெ ரிக்கச்,
சென்றவா பவம ழித்தாள் சென்னப்ப னகரு ளானே.(உ

அம்பிகை தனஞ்சு ரந்த வருட்பெரும் பால ருந்திச்,சம்பு
சங் கரவென் றுன்னைத் தமி ழினாற் பாடி னார்க்குச், செம்
பொருள் சிவிகை தந்த சிவபிரா னென்னைக் காப்பாய்,சி
ம்புளா யரியை வென்ற சென்னப்ப னகரு ளானே. (ங)

கண்ணினாற் கண்டே யுன்னைக் கால்களாற் கோ
யில் சூழ்ந்து, பண்ணொடு பாடு கின்ற பத்தருக் கருள்
செ யெந்தாய், விண்ணவர் பிரானே யுன்னை வேண்டி
னே னருள் தந் தாளாய், திண்ணிய மதில்வா ணேங்குஞ்
சென்னப்ப னகரு ளானே. (௪)

அறம்பொரு ளின்பம் வீடா மவையிற்றின் ப
குப்பை யோரே,னிறந்தனி வேனக் கோடு நிறைந்தி
ட வணிந்த தேவே, மறம்பயில் வேனில் வாழ்க்கை
மரபினிற் றுய்த்துப் பின்னர்,சிறந்தநின் னருளாய் தச்
செய் சென்னப்ப னகரு ளானே. (௫)

மானமோ டவமா னத்தை மாற்றுஞா னியரு ள
த்தே, தானது வாகி நிற்குந் தலைவனே செங்கோ
லோச்சு, மீனவா புயங்க மிந்து வெள்ளநீர்க் கங்கை
மிக்க, தேனமர் கொன்றை வேணிச் சென்னப்ப ன
கரு ளானே. (௬)

கற்புள கௌரிக் காகக் கருணையால் விருத்த வேட
முற்படக் கொண்டு வந்து முரிவில்வா லடிசி லுண்டு

பிர்படக் குமர ஞகிப் பேதுறு மதலை யான, சிற்ப ரா வெனையு மாட்கொள் சென்னப்ப னகரு ளானே.

வித்துவா னகம்பா வத்தை வேரறச் சிதைப் பான் பாண, பத்திர னடிமை யென்னப் பகர்ந்தொ ரு விறகா ளாக, வத்தநீ கொண்டகோல மடியவர் பொருட்டே யன்ரே, சித்தம்வைத் தென்னை யாள் வாய் சென்னப்ப னகரு ளானே. (அ)

அன்பொடு பாடி நின்னை யகங்குழைந் துருகி நித்த, மென்பணி யணிந்த பெம்மா னிருங்களி யுனக் குண் டாக, நன்பணி புரிய கில்லே ஞயினே னுய்வ தென்ரே, தென்பக்க நோக்கி யாடுஞ் சென்னப்ப ன கரு ளானே. (கூ)

அன்றுநீ மதுரை வேந்த னன்பினுக் காக வெள்ளி மன்றிலே மாறி யாடி மன்னனைக் களிக்கச் செய்தாய் குன்றைவில் லெனக்கைக் கொண்ட கொற்றவாகற் ரேர் பேறே, சென்றவர்க் கனமிட் டோம்புஞ் செ ன்னப்ப னகரு ளானே, (கo)

சிவமயம்.

## மீனாக்ஷியம்மைதுதி.

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

அண்டமெலா மீன்றளிக்கு மம்மை யேயென் னுந்திரே வழுதிசெயு மரிய வேள்விக், குண்டமிசைத் தாமரைமேல் முலைமூன் றாகக் கொண்டெழுந்த பசுங்குழலைக் குருந்தே நின்றாட், டெண்டமென வொருவிசை தாழ்ந் தோரை யாருஞ் சேவிப்ப வரனேற்றுந் தேவி நாயேன், பண்டைவினை யொழித்துய்யக் கடைக்கண் செய்வாய் பரிந்தங்க யற்கண்ணி பணிந்திட் டேனே.

சுந்தரப்பொன் முடிபுனைந்திவ் வுலகை யாண்டு சொக்கலிங்கந் தனைமணந்த தோகாய் விண்ணோர்,இந்திரன்றன் மகுடபங்க மியற்றுஞ் சீர்சா லிளவறனைப் பெறுதபெற்ற வெந்தா யன்னை, சிந்தாபடிந் திடமகினன் றனுலேழு திரைகடலும் வரவழைத்துச் செழியர் கோமா, னங்கரத்தி னின்றும்வரப் புரிந்த பொன்னேயங்கயற்க ணன்னேயென் றனையாளின்னே.

## சுப்பிரமண்ணியர் துதி.

---

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

தேன்றுளிக்குங் கடம்புதுழா வெட்சி யந்தார் தி
ண்புயத்தி லணிந்தவெங்க டேவே தேனக், கான்றுதை
யுமெயினர்குலக் கன்னி தோயக் கணபதியைக் கரியுரு
வாய் வரச்செய் கந்தா,மூன்றுதிருக் குடையவன்ற னொற்
றி நாட்டமுளைத்தமுழு முதற் பொருளே புலவர் பாடற்,
சான்றுறைந்து கலைமொழிந் தாண்ட வெங்கள் சண்மு
கனே பெண்மயலைத் தவிர்த்தாட் கொள்ளே.

இருவர்க்கு நவவீர ரிருந்து போற்று மெம்மானே பல
வண்டத் திருந்து வந்த, திருவாரச் சூர்படைக ளெல்லா
மாளச் செங்கையினி லம்படையாற் செகுத்த மிக்க, வரு
வாய்ந்த சேவகனே தேயு கோழி யுயர்கொடியா யிரதமி
சை யொலிப்பச் செய்தோய்,மருவார்க்கு நின்கமல மலர்த்
தாட் பேணி வாழவெளி யேற்கருளை வழங்கி டாயே.

# அண்ணுமலைநாதர்

## தோத்திரப்பாக்கள்.

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

சூத்திர தாரி யாவாய் தோகையோர் யாகா நல்ல பாத்திரந் தமக்கெந் நாளும் பரிவுட னுதவு கில்லேன் எத்தியுள் ளொருகா லுன்னி லிருங்கதி யளிப்போய் காப்பாய், கார்த்திகைத் தீபங் காட்டக் கதியண்ணு மலையிற் றேவே. (க)

பார்த்தன்செய் யன்புக் கன்னுன் பரிவில்லா லடிமேற் பூண்டாய், வேர்த்தியாம் பிரம மென்ற விரகில்லா விரு வர் தேடச், சூர்த்தனி யழற்பி ழம்பாய்த் தோன்றினை யென்று னின்னை, யார்த்தலன் பதுவே போலு மணிய ண்ணு மலையிற் றேவே (உ)

நேத்திரங் கழற்ற ரித்து நேமியை நின்பாற் பெற்ருன் சாத்துபூ வதனுற் பூசை தான்செய்த முனிவற் கன்னை யீத்துத்திக் கையினைப் பெற்ற விருந்தொண்ட னன் ருே வன்ணு, ஞத்திக ஞேவேன் காணுன் கருமண்ணு மலையிற் றேவே. (ங)

அம்பிகை விளையாட் டாக வருக்கனோ டிந்து வன்னி
தம்படி வமதாங் கண்க டமைமூடுங் கார ணத்தாற்,
கம்பமி லாதே கோற்கக் காதலாற் பயல்தங் தாண்ட
செய்பொனே யெனையாட் கொள்வாய் திணியண்ணு
மலையிற் றேவே. (௪)

குகைநம சிவாய தேவக் குருபரன் றனக்கு வேதச்
சிகையுறு பொருளைத் தேற்றித் தெளிந்தவர் புகழு
மன்னுன், தகைபெற வுரைத்த பாட றன்னையேற் ரு
ண்டோ வென்னை, பிகைதவிர்த் தாள வேண்டும் விறை
யண்ணு மலையிற் றேவே. (ரு)

அண்ணுமலைநாதர்

தோத்திரப்பாக்கள்

முற்றுப்பெற்றன.